13th February 1959]

* 312 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) the number of tank improvement works taken up in the Kanyakumari district and Shencottah taluk, Tirunelveli district after their merger with this State;

(b) the number of acres benefited by these works; and

(c) the amount spent so far?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) 159 works.

(b) 33,068 acres.

(c) Rs. 15·45 lakhs.

*Overhead tank for Alakandapuram village*

* 313 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வடஆற்காடு ஜில்லா வாணியம்பாடி பக்கத்திலுள்ள அலகந்தாபுரம் கிராமத்தில் 1954-ல் (over head tank) கட்ட பஞ்சாயத்துத் தலைவருக்கு காண்டிராக்ட் கொடுக்கப்பட்டதா ?

(ஆ) அட்வான்ஸ் தொகை எவ்வளவு கொடுக்கப்பட்டது ?

(இ) அது கட்டி முடிந்துவிட்டதா ?

(ஈ) எப்போது ? இல்லை என்றால், ஏன் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) The work was entrusted to the headman of the village, on behalf of the Alagandapuram panchayat.

(b) Rs. 4,500 in March 1957.

(c) The work has not yet been completed.

(d) The progress of the work slowed down due to the revision of the original estimate, which had provided for only steel tanks while the villagers insisted on having a R.C.C. reservoir.



SRI V. K. KOTHANDARAMAN : ரெஜிஸ்டெர்ட் கண்டிராக்டர்களாக அல்லாதவர்களிடத்தில் இதுபோன்ற வேலைகள் விடப்பட்டால், பல வருஷங்களாகியும் அவை செய்துமுடிக்கப்படுவதில்லை. அப்படிப்பட்ட கண்டிராக்டர்கள் சம்பந்தமாக தகுந்த நடவடிக்கைகள் எடுப்பதற்கு வகை செய்யக்கூடிய சட்டம் இல்லாததால், அத்தகைய நடவடிக்கைகள் எடுக்க முடிவதில்லை. இதன் காரணமாக இதுபோன்ற பல நல்ல வேலைகள் "பெண்டிங்காக" இருக்கின்றன. ஆகவே, நான் குறிப்பிட்டதுபோன்ற நடவடிக்கைகளை எடுப்பதற்கான சட்டத்தை இயற்ற அரசாங்கம் முயற்சிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தத் திட்டத்தைப் பொறுத்த வரையில் கொஞ்சம் காலதாமதம் ஆனதற்குக் காரணம் என்னவென்றால், முதலில் 11,000 ரூபாய்க்குத் தயாரிக்கப்பட்டிருந்த எஸ்டிமேட் பிறகு 20,000 ரூபாயாக மாற்றப்பட்டது. எஸ்டிமேட் மாற்றப்பட்டதால் ப்ளான்கள் முதலியவைகளை அதற்குத் தகுந்தபடி தயாரிக்க வேண்டியிருந்தது. இந்தத் திட்டம் இந்த மார்ச் மாதத்திற்குள் முடிந்துவிடும் என்று தெரிகிறது.